Regd M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு



மலர் 28 | மன்மத ஆடி 1955 ஜூலை | இதழ் 7

## தில்லைக்கூத்தன் தொல்லைமாண்பு

பத்திராசிரியர்

தில்லைக்கூத்தன் திருக்குட முழுக்கைச் சென்ற வியாழக்கிழமை (7-7-1955) பல லக்ஷக்கணக்கான மக்கள் தரிசனம் செய்து, பிறவிப் பெரும்பயன் பெற்றுர்கள். தொடர்ச்சியாக நடைபெற்ற பல சொற்பொழிவுகள் மூலம் அவன் அளவிலாப் பெருமையைச் செவிக்கின்னமுதாக நுகர்ந்தார்கள். இவற்றைப் பற்றிய விரிவான குறிப்புக்கள் அடுத்த இதழில் வெளிவரும். பொதுவாகத் தில்லைத் தலத்தின் சிறப்பைப் பற்றியும், தில்லைக்கூத்தன் கருணைத் திருவிளையாடல்களைப் பற்றியும் சுருக்கமாக எழுதி நமது பத்திரிகையும் இக்குடமுழுக்கு விழாவிற் கலந்து கொள்கின்றதும் பொருத்தமேயாகும்.

தேவாரப் பாடல்பெற்ற திருத்தலங்கள் 274-னுள் முதன்மைத் தானம் தில்லைக்கே உரியது. பழைய வரலாறுகள் சோழநாட்டுத் தலங்களையே முதலில் தொடங்கிக் காவிரிக்கு வடகரைத்தலங்களுள் ஒன்றுகிய தில்லையைப் பற்றியே ஆரம்பம் செய்யும். தேவார பரிபாஷையில் "கோயில்" என்பது தில்லையைக் குறிக்கும். உலகத்திலுள்ள ஏனைய ஆலயங்கட்கெல்லாம் கோயில் எனும் பெயர் வழங்குவது உபசாரமேயாகும். அண்ட சராசரங்கள் அனைத்திற்கும் " கோ " (அரசன்) ஆக ஆணை செலுத்துபவன்

தில்லைக்கூத்தனே ஆவான். ஏனைய கடவுளர் எல்லாம் அவன் ஏவிய வழித், தத்தம் தொழில் புரிவர். தில்லைக் கூத்தன் திருநடனம் ஆதியும் அந்தமும் இல்லாது என்றும் நடைபெறும். அவனுடைய ஆட்டம் நின்றால், உலகங் களும் உயிர்களும் இயங்காமல் மாய்ந்துபோம். திருமூலர் திருமந்திரத்தில் இதைப் பல பாடல்களில் மிக நன்றாக விளக்குகிறார். "எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்" முதலியன காண்க. ஒவ்வொரு மனிதனுடைய இருதயத் துடிப்பிலும் அவனுடைய திருக்கூத்து நிகழ்கின்றது. ஒவ் வோர் அணுவிலும் அவன் திருக்கூத்து நிகழ்வதைப் பரமாணு பற்றிய ஆராய்ச்சி துலக்குகின்றது. விண்ணிற் பொலிகின்ற கதிரவன் முதலிய எல்லாப் பொருள்களிலும் அவனுடைய திருக்கூத்தே விளங்குகின்றது. ஐம்பெரும் பூதங்களிலும் சூரியன் சந்திரன் ஆன்மா ஆகிய மூன்றிலும் அவன் இயங்குவதையே சாத்திர பரிபாஷையில் "அஷ்ட மூர்த்தம்" என்று சொல்வது மரபு.

இவ்வாறு எங்கும் நீக்கமற நிறைந்துள்ள இயக்கத் தைப் பழைய தமிழ் மக்கள் வழிப்பட்டனர். அவ்வழி பாட்டிற்கு இடமும் பொருளும் இன்றியமையாதன ஆகை யால் தில்லை அம்பலத்தையும், திருக்கூத்தனையும் உருவக மாகக் கொண்டனர். கோயில் வழிபாட்டு முறையில் சைவர்கள் பஞ்சபூத ஸ்தலங்களைக் கொள்வதுண்டு. பிருதி வித்தலமாக கச்சிஏகம்பத்தையும் ஆரூரையும், அப்புத்தல மாக ஆனைக்காவையும், தேயுத்தலமாக அண்ணாமலையை யும், வாயுத்தலமாக காளத்தியையும், ஆகாயத்தலமாக தில்லைத் திருச்சிற்றம்பலத்தையும் கொள்வது மரபு. இங்கு ஆகாயம் என்பது நீலவானத்தையன்று. எல்லாவிடத்திலும் நிறைந்து ஒலி, ஒளி முதலிவைகளை தனது சிற்றலை, பேரலை வழியாகப் பரப்புகின்ற "Ether" எனும் பொருளையே குறிக்கும். இதை வெளி என்றும் கூறுவதுண்டு.

இனி தில்லைத்தலத்தின் பழைய வரலாறுகளைச் சிறிது காணலாம். பல ஆயிர ஆண்டுகளுக்கு முன் இது தில்லை மரங்கள் நிறைந்த வனமாய் இருந்தது. புலிக்கால் முனிவர் (வியாக்ரபாதர்) இவ்வனத்தில் தவம் புரிந்து சிவபூஜை செய்திருந்தார். பின்பு இரணியவர்மன் திருக்கோயில் கட்டிய வரலாற்றை உமாபதி சிவனார் அருளிச்செய்த

"கோயிற்புராணம்" அழகாக விவரிக்கின்றது. முதன் முதலாக மிகச் சிறிய அளவில் இருந்த இக்கோயில், பற் பல மன்னர்களின் வள்ளன்மையாலும் பக்திப் பெருக்கா லும் இப்போதுள்ள பெருநிலையையடைந்துள்ளது. தில்லைக் கூத்தன் காட்சி வழங்கும் மிகச் சிறிய இடத்திற்குச் சிற்றம்பலம் அல்லது சிற்சபை என்று பெயர். இதையே கல்வெட்டுக்கள் வடமொழியில் தப்ரசபா (Dhabra Sabha) என்று குறிக்கின்றன. நாளடைவில் சிற்சபை என்பது சித்சபை என்று மாறி சிதம்பரம் எனப் பெற்று சிதாகாசப் பெருவெளியைக் குறிப்பதாகக் கொள்ளப்பட் டது. தில்லைக்கூத்தன் வலதுபுறத்தில் ஆகாய வழிபாட்டைக் குறிக்கும் முறையில் பொன்னாலாகிய பல வில்வமாலைகள் தொங்கவிடப்பட்டடு, ஒரு திரைபோட்டு "சிதம்பர ரகசியம்" என்று பெயர் வழங்கப்பட்டுள்ளன. திருச் சிற்றம்பலத்தின் மேலுள்ள ஸ்தூபி ஏனைய தலங்களில் உள்ளதுபோல் இராமல் சாதாரண வீடுகளுக்கு மேலுள்ள கூரை போன்றுள்ளது. இவ்வாறே சேரநாட்டுத் தலங் களிலும் உள்ளது. திருச்சிற்றம்பலத்தின் மேற்கூரை 21600 தங்க ஓடுகளால் ஆகியது. பல கல்வெட்டுக்களில் சோழ மன்னர்கள் அவ்வப்போது இந்த ஸ்தூபிக்கு பொன் வேய்ந்தமை புகழப்படுகின்றது. ஒரு நிமிஷத்திற்குப் பதினைந்து (15) மூச்சு வீதமாக 24 மணி நேரம் கொண்ட ஒரு நாளில் ஒரு மனிதன் 21600 மூச்சு விடுகின்றான். தங்க ஓடுகளின் மொத்த எண்ணிக்கை இஃதே யாகை, சிற்றம் பலத்தின் உள்ளிருப்பவன் உயிருக்குயிராய், இதய வெளி யில் நட்டம் புரிபவன் என்ற தத்துவ உட்கருத்து புலப்படு கின்றது. சிற்சபையின் மேலுள்ள கலசங்களின் எண் ணிக்கை, கனக சபையிலுள்ள தூண்களின் எணணிக்கை, கீழே பரவியிருக்கும் கற்களின் எண்ணிக்கை, முதலியவற் றிற்கும் பல தத்துவார்த்தங்கள் கூறப்படுவதுண்டு. கனக சபையிலிருந்து சிற்சபைக்கு ஏறுவதற்கு ஐந்து படிகள் உண்டு. இவைகட்குப் "பஞ்சாக்ஷரப்படிகள்" என்று பெயர். பஞ்சாக்ஷர ஜபத்தின் வழியாக ஏறி இறைவனை அடையலாம் என்பது கருத்து. படிகளின் இருபுறமும் யானை உருவங்கள் உள்ளன. சித்தாந்த சாத்திரங்கள் பதினன்கனுள் ஒன்றாகிய "திருக்களிற்றுப்படியார்",

எனும் சுவடியை இப்படிகள் ஒன்றன் மேல் வைத்தபோது, இப்படியின் உருவத்துள் உள்ள யானைகளுள் ஒன்று, தனது தும்பிக்கையால் இந்தச் சுவடியை தில்லைக்கூத்தன் திருவடியில் தூக்கிவைத்தபடியால் இந்நூலுக்கு இப்பெயர் ஏற்பட்டது. பலசோழ மன்னர்கள் மகுடாபிஷேகம் அவர்களை இப்பஞ்சாக்ஷரப்படியில் தில்லைக்கூத்தன் திருமுன்பு அமரவைத்து நடைபெற்றது. (இத்தகைய சிறப்புக்கள் பெற்ற இப்பஞ்சாக்ஷரப்படிக்கு எனது நெருங்கிய உறவினர்களாகிய மணலி சின்னையா முதலியார் குடும்பத்தினர் அவ்வப்போது வெள்ளித் தகடுகளைப் புதுப்பித்து சார்த்தி வருகின்றனர்.) திருமால் பிரமன் முதலியோர் இசைக் கருவிகளை ஒலிக்க, தேவர்களும் முனிவர்களும் மக்களும் காண, கூத்தப்பிரான் என்றென்றும் திருநடனம் புரிகின்றான். ஏனையோர் கூத்தாடுதற்கு நட்டுவனார் இயக்குவித்தல் வேண்டும். தில்லைக்கூத்தன் அவ்வாறின்றி, ஒருவர் இயக்குவிக்காமல், தானே பிறரை இயக்குவிக்கும் முறையில் நடம் புரிகின்றான் என்பதைத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் அழகாகக் கூறுகின்றார்.

தில்லைக்கூத்தன் திருநடனம் ஐம்பெரும் தொழில்களை (ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல், என்பவற்றைக்) குறிக்கும். அம்மைசிவகாம சுந்தரி இத் திருநடனத்தை இடைவிடாது தரிசிக்கிறாள். "கண்டங் கரியான் கருணைத் திருவுருக்கொண்டங்கு உமை காணக் கூத்துகந்தானே" என்றார் திருமூலர். "பாலுண்குழவி பசுங்குடர் பொறுமெதன நோயுண்மருந்து தாயுண்டாங்கு" நமது பிறவிப் பிணிபோக்கவே, நம்பொருட்டு அம்மை தரிசித்து, தரிசனப் பலனை நமக்குத் தருகிறாள் என்பர் குமரகுருபர அடிகள். கோடி சூரியபிரகாசமுள்ள அத்திரு நடனத்தை, நம் ஊனக்கண்கொண்டு பார்க்கவே முடியாது.

தில்லையின் பெருமையைத் திருமுறைகள் மிக நன்றாக விளக்குகின்றன. திருஞானசம்பந்தர் பல பாசுரங்களால் அனுபவிப்பதைக் காணலாம். கற்று ஆங்கு எரியோம்பிக் கலியை வாராமே செற்றார்வாழ் தில்லைச்சிற்றம்பலம், செல்வ நெடுமாடம் சென்றுசேண் ஓங்கிச் செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற செல்வர்வாழ் தில்லைச்சிற்றம்பலம். மறையோர் தில்லை நல்லவர் பிரியாத சிற்றம்பலம், சீலத்தார்

தொழுதேத்து சிற்றம்பலம். ஊறும் இன்தமிழால் உயர்ந் தார் உறைதில்லை தன்னுள் ஏறு தொல்புகழ் ஏந்து சிற்றம் பலம் முதலிய சொற்றொடர்களைக் காண்க. திருநாவுக் கரசரும், வையகம் தனில் மிக்க மல்கு சிற்றம்பலம், தினைத் தனை வேதம் குன்றாத் தில்லைச் சிற்றம்பலம், இணையடிகள் தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலம், அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம், செய்யமாதுறை சிற்றம்பலம், தூய செம்பொன்னினால் எழுதி மேய்ந்த சிற்றம்பலம் என்று கூறுவன காண்க. சுந்தரமூர்த்தி சுவாமிகளும் பல்லவர்க்குத் திறைகொடாத மன்னவரை மறுக்கம் செய்யும் பெருமையார் சிற்றம்பலம், முட்டாதே முச்சந்தி மூவாயிரவர் சிற்றம்பலம் என்பன காண்க.

இம்மட்டில் தலப்பெருமையை நிறுத்தி இனி கூத்தப் பிரான் பெருமையைப் பற்றிய சிலவற்றைக் காண்பாம். அவன் திருநடனத்தில் ஐம்பெரும் தொழில்கள் குறிக்கப் படுவதைத் "தோற்றம் துடியதனில்" எனும் செய்யுள் கூறும். அத்திருவுருவத்தில் ஐந்தெழுத்து அமைந்திருத் தலையும் சில செய்யுள்கள் கூறுகின்றன. சாத்திரக் கருத்துக் கள் ஒருபுறம் இருக்க, அவனுடைய திருவுருவத்தின் பேர் அழகுக் கவர்ச்சியை அப்பர் சுவாமிகள் நன்றாக அனுபவிக் கிறார். "குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்...எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே", "என் றுவந்தாய் எனும் எம்பெருமான்தன் திருக்குறிப்பே, சிற்றம் பலவன் சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே" என்பன காண்க. இந்தப் பேரழகை யும் கவர்ச்சியையும் இன்று தரிசிப்பவர்களும் அனுபவிக்க லாம். திருவிசைப்பா ஆசிரியர்களும் கூத்தப்பிரான் பாதாதி கேச அனுபவத்தை 12—22, 215—225 எண்ணுள்ள திரு விசைப்பா பாடல்களில் குறித்துள்ளனர்.

இம் மட்டில் இதை நிறுத்தி, தில்லைக்கூத்தன் கருணைத் திருவிளையாடல்கள் சிலவற்றைக் காணலாம். காமதேனு வின் பால்குடித்து வளர்ந்த உபமன்யு, பாலுக்கு வேண்டி யழுதிட அப்பாலகனுக்குப் பாற்கடல் ஈந்தான் சிற்றம் பலவன். பாற்கடல் வற்றிற்று. ஆதிசேடனும் பதஞ்சலி யாக வந்து கூத்தப்பிரானை வழிபட்டான். பாற்கடலையும்

ஆதிசேடனையும் இழந்த திருமாலும் தில்லைக்கே வந்து இங்கு திருநடம் காண்கிறார். இப்பாற்கடலுண்ட உபமன்யு முனிவரே, கண்ணபிரானுக்குத் திருவடி தீக்கையும், பஞ்சாக்கர உபதேசமும் செய்து கயிலையில் முனி கணங்கட்குச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றை உரைத்தார். கூத்தப்பிரான் தனது வலதுகை உடுக்கையை ஒலித்துப் பதினான்கு ஒலிகளை எழுப்பி, அவைகளைக் கொண்டு பதஞ்சலியை மகாபாஷ்யம் எழுதுமாறு செய்தான். இவரை மன்று தொழுதபதஞ்சலி என்று திருமூலர் புகழ்கின்றார். யோக நெறியில் வழிபடுவோர்க்குக் கூத்தன் சிலம்பொலி கேட்கும். சேரமான் பெருமான் நாயனார் வழிபாட்டில் சிலம்பொலி கேட்கத் தாமதம் ஏற்பட்ட காரணங் கொண்டே, அவருக்கு நம்பியாரூரர் தோழமையைத் தந்ததும் கூத்தப் பிரானே. திருநீலகண்டத்துக் குயவனார்க்கு இளமை அளித்ததும் அவன் திருவிளையாடலே. கணம்புல்ல நாயனார், கூற்றுவநாயனார், கோச்செங்கட் சோழ நாயனார் முதலியோருக்கும் அவனே முத்தியளித்தான். திருநாளைப் போவாரையும் தில்லைக்கழைத்து தீக்குளிக்கச் செய்து, மாமறை முனிவராக்கி அனைவர் கண்ணுக்கெதிரிலும் தனது திருவடியில் மறைந்து, முத்தியடையும்படியருளினான். திருவாதவூரருக்கு அருள்புரிந்து, ஈழநாட்டுப் புத்தர்களை வாதில்வென்று, ஊமைப் பெண்ணைப் பேச வைத்துத் திருச்சாழல் பாசுரங்கள் பெற்றான். "பாவை பாடிய வாயால் கோவை பாடு" என்று வேண்டி, திருவெம்பாவை அருளிய அவரைக்கொண்டு திருச்சிற்றம்பலக் கோவை நானூறு பாடல்களையும் அவர்பாடும்போது தானே ஏடும் எழுத்தாணியும் கொண்டெழுதி, இறுதியில் "வாதவூர்ச் சிவபாத்தியன் சொல்ல அழகிய சிற்றம்பலவன் எழுதியது" என்று கைச்சாத்திட்டுச் சிற்சபையில் வைத்தான். தில்லை மூவாயிரவர் இச்சுவடியைக் கண்டெடுத்து, வாதவூரரைத் திருச்சிற்றம்பலத்திற்கு அழைத்து, இச்சுவடியில் உள்ள பாடல்களின் பொருள் என்னவென்று வினவ, அவர் கூத்தனைச் சுட்டிக்காட்டி, அனைவரும் அவன் திருவுருவைக் காணும் ஒருகணத்திற்குள், தனது தூல உடலைச் சூக்குமத்திலும், சூக்கும உடலை அவன் திருவடியிலும் ஒடுக்கி மறைந்தருளினார்.

முதல் இராஜராஜ சோழன் எனும் திருமுறை கண்ட சோழன் பக்திக்கிரங்கி, நம்பியாண்டார் நம்பிகளைக் கொண்டு திருமுறைகள் சேமிக்கப்பெற்றிருந்த அறையைத் திறப்பித்து அவைகளை வெளிப்படுத்தியதும் தில்லைக்கூத்தன் திருவிளையாடலே. சேக்கிழார் பெருமானுக்கு "உலகெலாம்" என்று அடியெடுத்துக்கொடுத்து திருத்தொண்டர் புராணத்தைத் தொடங்கித் தில்லையிலேயே இருந்து ஓராண்டில் எழுதி முடிக்கச் செய்து சைவம் வளர்த்ததும் கூத்தப்பிரான் அருஞ்செயலேயாகும். ஒரு விழாவில் திருத்தேர் ஓடாது தடைப்பட, சேந்தனர் நிவேதித்த களியமுதை உண்டு அவர் திருப்பல்லாண்டு பாடிய பிறகு தேரை ஓடவைத்ததும் அவன் கருணைச் செயலே. தில்லைவாழ் அந்தணர்கட்கு உமாபதி சிவனர் பெருமையை உணர்த்தவேண்டி, ஒரு விழாவில் திருக்கொடி யேற்றமாகாதபோது அவ்வுமாபதி சிவனரைக்கொண்டு "கொடிக்கவி" பாடவைத்துக் கொடி யேற்றம் நிகழச் செய்தான். அவருக்குக் கைச்சீட்டெழுதி யனுப்பிப் பெற்ருன் சாம்பான் எனும் ஆதித்திராவிடத் தொண்டனுக்கும், முள்ளிச்செடிக்கும் முக்தியளிப்பித்தான் கூத்தப்பிரான் பெருமை கருணை முதலியவற்றை அளந்தறிதல் மன்னுயிர்க்கருமை யாதலின் இம்மட்டில் முடித்தல் சாலும். எல்லா ஆலயங்களிலுமுள்ள மூலத்தான சிவலிங்கங்களின் கலைகள் எல்லாம் இத்தலத்துள்ள மூலத்தான லிங்கத்துள் அர்த்தசாம பூசை முடிந்தவுடன் வந்து ஒடுங்குவதால், இம்மூர்த்திக்குத் திருமூலட்டான நாதர் என்றே பெயர். தில்லைக்கூத்தன் திருவருள் என்றும் இன்பம் பெருக்கும் இயல்பினல் நம்மை என்றும் நிலவி உலகெலாம் இருக்கச் செய்க. தில்லைக்கூத்தன் திருவடி வாழ்க.

---

# அருளும் பொருளும்

அ. கு. காமாக்ஷியம்மையார், M. A.

இந்த இரண்டு சொற்களின் பொருள்களை ஆராய்வோமேயானல் பொருள் என்ற சொல்லுக்குரிய பொருள்கள் எண்ணிறந்தன. ஆயினும் இத்தொடரில் உலகத்தே தோன்றி நின்றழியும் பொருட் செல்வத்தையே கொள்

வோம். அருள் எனும் சொல்லோ அன்பின் முதிர்ந்த நிலையாக-கனிந்த நிலையாகக் கருதப்படுகின்றது. மனைவி; மக்கள், உற்றார், உறவினர், நண்பர், இனத்தார் என ஏதேனும் ஒரு தொடர்புபற்றியே தோன்றும் அன்பானது படிப்படியாய்ப் பரந்து விரிந்து அருளாய் மலருகின்றது. "அருளென்னும் அன்பீன்குழவி" என்பர் வள்ளுவனாரும். தொடர்பால் வரும் தொடக்க அன்பு தோன்றியபின் ஓங்கி வளர்வதும் உண்டு; திடீரென மங்கி மடிவதுமுண்டு. சிறந்த நண்பர், கணவன், மனைவி, அண்ணன், தம்பி, தமக்கை, தங்கை, பெற்றோர், பிள்ளைகள் ஆகியவர்களிடையே பிறந்து விளங்கும் அன்பும் திடீரென்று, பெரும்பாலும் பொருள் காரணமாகவே, நலிந்து, மெலிந்து, இறந்துவிடுவதைக் காண்கின்றோம். அத்தகைய அன்பு பெருந்துன்பத்திற்கே வித்தாவதையும் காண்கின்றோம். இதனையெல்லாம் அறிந்தே காரைக்காலம்மையார் சிவபெருமானிடத்தில் "இறவாத இன்ப அன்பு" வேண்டி வரமாய்ப் பெற்றார். எனவே அன்பின் கனிந்த நிலையாகிய அருள் இறவாதது, இன்பந் தருவது - கைம்மாறு கருதாதது. ஏழை எளியவர்பால் தோன்றும் இவ்வருள் ஓரரிய பண்பாகும். இதன் அருமை அருள் என்ற சொல்லின் முதலிரண்டு எழுத்துக்களிலேயே அமைந்திருப்பதும் மிக அருமையானது! இதற்கு முற்றிலும் முரணான பொருளோ வீட்டிலும், நாட்டிலும் பல போராட்டங்களை விளைவிப்பது; வாழ்க்கைப் போராட்டத்திலும் ஒருவரோடு ஒருவர் 'பொரு'வதற்குரியது என்ற அரிய பொருளும் "பொருள்" என்ற சொல்லின் முதலிரண்டு எழுத்துக்களில் பொருந்தியிருப்பதும் பொருத்தமானதே! அருளின் பெருமையை விளக்கவே வள்ளுவனார் "அன்புடைமை"யை பெரும்பான்மையராகிய இல்லறத்தார்க்கு அமைத்து, "அருளுடைமை"யை மிகச் சிலரும் அருமையானவருமாகிய முற்றத்துறந்த முனிவர்க்கு-துறவிகளுக்குப் பொருத்திக் காட்டுவாராயினர். இத்தகையதோர் இறவாத இன்பந்தரும், கைம்மாறு கருதா அருளுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கருதப்பெறுவது ஆண்டவன் அடியவர்பால் காட்டும் அருளேயாகும்.

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு"

என்ற குறளின்படி மழை எப்படி மக்கள்பால் கைம்மாறு கருதாது பெய்து வாழ்விக்கின்றதோ அதைப்போன்று இறைவனது இன்னருளும் மக்கள்மீது பொழிந்து மகிழ் வித்து வாழச் செய்கின்றது. ஆகையால்தான் அவனருளை மழைக்கே உவமையாக்கினர் அதனை நன்குணர்ந்த மணிவாசகர், ''தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாம்'' என்று அருளு கிறார் திருவெம்பாவையுள். எங்கோமானாகிய சிவபெருமா னது அன்பர்க்கு இன்னருளை முன்னிருந்து சுரப்பவள் அம்பிகையே என்ற கருத்தும் இங்கு சுவைக்கத்தக்கது. இன்றும் உலகவாழ்விலே, சிறிய அலுவலர் முதல் பெரிய அரசியல் அதிகாரிகள் வரை யிருப்போரின் உதவியைப் பெற, அன்னாரது வீட்டரசியார் மூலம் நாடிச்செல்வதையே மக்களிடையே காண்கிறோம்!

இறைவனது இன்னருள் பெரு மழைபோல் பெருகி வரும் வெள்ளம்! அதை மடைமாற்றி ஒருபுறத்தே ஓடிச் செல்லுமாறு செய்யும் அணைபோன்றவள் அம்மை என்றும் கண்டோம். இத்தகையதோர் வெள்ளத்தின் நீரைப் பருகி நுகர முதலில் அடியவரிடையே 'தாகம்' - அருள்வேட்கை - இருத்தல் இன்றியமையாததாகும். உணவை நாடிநிற்கும் பசியைக் காட்டிலும், நீரை வேட்டு நிற்கும் - தாகம் - நீர் வேட்கை மிகமிகக் கொடியது; தாங்குதற்கரியது. எனவே தான் இதை 'அருள்வேட்கை' என்றே சான்றோர் குறிப்பா ராயினர்.

காகமானவை கோடிகூடி நின்றாலும்ஒரு
கல்லின் முன்னெதிர் நிற்குமோ
கர்மமானவை கோடிமுன்னே செய்தாலும்நின்
கருணைப்ர வாக அருளைத்
தாகமாக நாடினரை வாதிக்க வல்லதோ

என்று தாயுமானவர் இவ்வருள் தாகத்தைப்பற்றி உருக்க மாய் உரைப்பார். இவ்வருள் தாகம் கொண்டவர்கள் அத் தாகம் தணிந்தாலொழிய அமைதி காணமாட்டார்கள் -

உயிர் தரிக்கவும் முடியாது - நீர்வேட்கை கொண்டவர்களைப் போலவே.

" ஆரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைப்பேன்
ஆண்டநீ யருளிலை யானால்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே "

என்று மணிவாசகப்பெருமான் மனமுருகப் பாடுவது இங்கு மிகப் பொருத்தமாய் அமைகின்றது. " உன் அருளில்லை யானால் என்னால் வாழ இயலாது எனக் கதறுகின்றார். உன்னருளாகிய நீரையே நான் நாடி ஏங்குவது, உலகில் என்னவோ, வேறுபல 'நீர்' வகைகளாய இன்பப் பொருள் களுக்கு எல்லையில்லை. ஆனால் அவை என் தாகத்தைத் தணிக்கமுடியாது " என்ற நயந்தோன்ற 'வார் கடலு 'ல கில் வாழ்கிலேன் என்ற கூற்று உய்த்துணரத் தக்கது. இவ்வாறு தன் மெய்யடியார் அருள்வேட்கை கொண்டு அலறும் போது " நோவ உரையான் - எம்மை நோவக் கண்பார்த் திடான் " என்ற அருளிலக்கணம் பொருந்திய எம்பெருமான் அடியாரின் அருள்வேட்கைதீர அருள் மழை பொழி கின்றான். அது பெருவெள்ளமாய் வரும். " கருணைப்ர வாக அருளை " என்பது தாயுமானர் திருவாக்குமாகும். இப்படி வெள்ளமாய், அருவிபோல் வரும் இன்னருள் நீர்ப் பொருளாய்த் தோன்றினும் வெறும் நீராகுமா ! அமுதம் போன்றது. அமுதத்தைக் கண்டவரில்லை. உண்டவரில்லை யென்றாலும், பாற்கடலில் கடைந்தெடுக்கப்பட்டது-பாலில் எடுக்கப்பட்டது 'Cream' என்னும் வெண்ணெய் போன்ற தோர் உயர்ந்த பொருளாய்க் கற்பனை செய்து கொள்ளலா மல்லவா ?

சத்துப்பொருள் (Vitamins A and D and fat etc.) நிறைந்ததாய் உடலை யோம்பும் ஒருயர் பொருள் எனக் கொள்ளலாம். இன்றும் உயர்ந்தோர் எனும் பொருளில் சமூகத்திற் பெரியோரை " The Cream of Society " எனக் குறிப்பது மரபு. ஆனால் இவ்வுயர்பொருளும் தெவிட்டும். ஆனால் அவ்வமுது போன்ற இறைவன் " தெவிட்டாத தெள்ளமுது ", " ஆரா அமுது " என்று

அழைக்கப்படுகின்றான். எனவே அவன் பொழிகின்ற இவ்வமுதமாம் அருள்வெள்ளம் வருங்கால், அது அமுதமாகவும் (Concentrated, liquid food) வெள்ளம்போல் வேகமாய்ப் பெருகி வருவதாலும், அடியவர்பால் என்ன நேரும்? தாகமும் ஒருபுறம் அதிகரித்து நிற்க, வரும் வெள்ளத்தை வேகமாய்ப் பருகிவிடவேண்டும் என்ற வேட்கையும் மிக, அதை வாரி விழுங்கும்போது விக்கலெடுத்துத் திக்குமுக்கலாடுவதையும் அதைத் தீர்கக வெறும் தண்ணீர் நாடும் நிலை வந்துவிடுவதையும் அநுபவித்துப் பாடுகின்றார் மணிவாசகப் பெருந்தகையார்,

'வழங்குகின்றாய்க்குன் னருளா ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின்றேன் விக்கினேன் வினையே னென்விதியின்மையால்
தழங்கருந்தேனன்ன தண்ணீர் பருகத்தந்து உய்யக்கொள்ளாய்
அழுங்குகின்றே னுடையாய் அடியேனுன் அடைக்கலமே"

இப்படியெல்லாம் அருளின் அருமையும் பெருமையும் அடியவரின் அனுபவ உரைகளின் மூலம் அறியக்கிடக்கின்றது. இத்தகைய தெய்வப்பண்பாம் அருளினை ஆருயிரிடத்தும் காட்டுவதைக் கடமையாக் கொண்டனர். அதுவே பிறப்பின் குறிக்கோள் எனவும் காட்டினர் பெரியோர்.

இனி தலைப்பின் மறுபொருளாம் பொருளை நோக்குவோம். தோன்றி நின்றழியும் உலகப்பொருள்களென இச் சொல்லுக்குப் பொருள் காண்போம். அப்பொருள்களையெல்லாம் நாம் நன்கு அறிவோம். எனவே அருளுக்கும் பொருளுக்குமுள்ள தொடர்பை இனி ஆய்வோம். பெரும்பாலும் அருளுக்குத் தடையாக இருப்பதே பொருள் என்ற கருத்தும் உண்டு. நல்ல செல்வத்திடையே அருள் அரும்புவது அரிதுதான்.

" இருவேறு உலகத்தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு"

என்பர் வள்ளுவரும். பொருள் இன்பந் தருவது. இன்பத் திளைப்பிலே இறைநினைப்பும் அருளும் தோன்றுவதரிது. இதனாலேயே பொருள் அருள் வாழ்வுக்குத் தடையாயிருக்கிறதென்றே, திடீரென, ஓரிரவிலே, காரிருளிலே, யாரு

மறியாமல், ஆருயிர் மனைவியையும் மைந்தனையும் அரண்மனை வாழ்வையும் புத்தர் பெருமான் நீத்து, அருள் வாழ்வை நாடி ஓடிவிட்டனர். தமிழ்நாட்டிலும் அது பற்றியே பெருஞ் செல்வத்தைப் பட்டினத்தடிகள் சட்டெனத் துறந்தனர். இது ஒரு சாரார் கருத்து.

ஆனால், பொருளைக் கொண்டே - கொடுத்தே அருளைத் தேட முடியாதென்றாலும், அருட் பணிகட்கெல்லாம் பொருள் தேவைப்படுகின்றதென்பதை நாம் மறக்கவோ மறுக்கவோ முடியாது. வானளாவும் கோயில்களும் அவற்றின் பாதுகாவலும் பொருளில்லையென்றால் உருப் பெற்றிருக்க முடியுமா ? படமாடுங் கோயில் பரமற் பணிக்கு நிகராகக் கருதப்பெறும் நடமாடுங் கோயில்களாம் மக்கள் தொண்டுகட்கெல்லாம் பொருள் இன்றியமையாதது. நாட்டில் பஞ்சமுற்றபோது அப்பரும் சம்பந்தரும் ஆண்டவனிடம் பொற்காசுகள் பெற்றுத் தானே மக்களிடையே தொண்டாற்றினர். ஏனைய தொண்டர்தம் வாழ்விலும் பொருள் தட்டுப்பட்டதாலேயே அவர்தம் திருத்தொண்டும் முட்டுப்பட்டதெனக் காண்கிறோம். உலகத்தொடு பொருந்திய அருள் தொண்டுகள் அனைத்திற்கும் பொருள் மிகமிக இன்றியமையாதது.

" அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு "

என்பது திருக்குறள். அருட்செல்வம், பொருட் செல்வம் இரண்டனுள்ளும் அருட்செல்வமே உயர்ந்தது என்ற எண்ணமும், அதனைத் தேடுதற்குப் பொருட்செல்வம் துணையாய் இருக்கவேண்டுமே தவிர பொருளே முடிவு அல்ல என்ற எண்ணமும் தோன்ற வள்ளுவர் அமைத்துள்ள குறட்பாக்கள் அரியனவாகும்.

" அருட்செல்வம் செல்வத்துட்செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள "

" பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார் ; மற்றாதல் அரிது "

இவ்வாறு இருசெல்வங்களும் ஓரிடத்தே அமையுமானல், அவர்கள் ஊருணி நீர்நிறைந்தது போன்றும், பயன்மரம்

ஊர்நடுவே பழுத்தது போன்றும் சிறந்து விளங்கிப் பயன் படுவர். பொருளால் அமைவது அறப்பணி - அறத்தின் முடிவே இறையருளாகும். ஏழையெளியோர்க்கு உண வளித்தல், உடையளித்தல், உறைவிடமளித்தல், கல்வி கொடுத்தல், மருந்தளித்தல், சமய அறிவு அளித்தல் எனப் படிப்படியே செல்லவேண்டும். இவ்வறங்களை அடிப்படை யாய்க் கொண்டமைந்தனவே பெரியபுராணத் தொண்டர் தம் வாழ்வும். இன்றும் வாழ்க்கை வசதிகளற்று வாடு வோரை இவ் வசதிகளைக் காட்டிஏற்கப் புறச்சமயக் கரங்கள் தானே நீட்டப் பெறுகின்றன. இவ்வறப் பணிகளை இறைபணியினின்றும் பிரித்து ஒதுக்கி விட்ட தால்தானே இன்று நம் சமயம் ஏசலுக்கும் பூசலுக்கும் இடம் தந்துவிட்டது. இதற்கு மாறாக இவ்விரண்டை யும் ஒன்றுசேர்த்து விட்டதால்தானே இன்றும் நம்மிடையே புறச்சமயம் அசைக்கமுடியாதவாறு வேரூன்றிவிட்டது. உள்நாட்டு வெளிநாட்டுப் பெரும் பொருளுதவியால்தானே புறச்சமயம் விரிந்து வளருகின்றது. வாழ்விழந்தோரையும் தம் வலையில் வீழ்த்திக்கொள்கிறது. தமிழ்நாட்டிலும் பொருள்மிக்க அருள் நிலையங்கட்குக் குறைவில்லை. அவை உயிர்ப்பணியிலே ஈடுபட்டு உண்மையான மக்கள் தொண் டாம் அருட்பணிக்குப் பொருட்செலவு செய்தல் இக்காலத்து மிகமிக இன்றியமையாதது. இவ்வாறு நம் சமயத்துறையி லும் அருளும் பொருளும் ஒன்றுசேர்வ தெந்நாளோ !

" அருளே உலகெலாம் ஆள்விப்பது ஈசன்
அருளே பிறப்பறுப்ப தானால்—அருளால்
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளு மாவ தெனக்கு " (காரைக்காலம்மையார்)

---

## பிரிவாற்றாமை

நமது சமாஜ நிர்வாக சபை உறுப்பினர்களாகிய திருவாளர்கள் - ச. நமசிவாய முதலியார், K. பாலசுந்தர முதலியார் சிவபதமடைந்த செய்தியை மிக வருத்தத் துடன் தெரிவிக்கிறோம்.

# அருணகிரிநாதர் சமயக்கொள்கை

G. S. ராஜன்

அருணகிரிநாதர் பிறப்பு, காலம், குலம் இவை குறித்து ஏதும் நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. எனினும், அவரது பல பாடல்களினின்றும் அவர் சைவ வேளாள வகுப்பில் சீலம்மிக்க தாய்தந்தையர்க்கு உதித்தவர் என்பது புலனுகின்றது. திருப்புகழில் பிரபுடதேவ மகாராஜன் குறிக்கப்படுவதாலும் மற்றும் பல குறிப்புக்களாலும் இவர் காலம் கி. பி. 15-ம் நூற்றுண்டின் இடைப்பகுதியென ஒருவாறு துணியலாம். (பிரபுடதேவ ராஜன் காலம் கி. பி. 15-ம் நூற்றுண்டின் இடைப்பகுதியென்பது கல்வெட்டாராய்ச்சியாளர் துணிபு.)

அருணகிரிநாதரது இல்லறவாழ்வு எவ்வாறு இருப்பினும், அவர் ஆழ்ந்த சைவசித்தாந்தி என்பது எவரும் மறுக்க இயலாததோர் உண்மையாம். ஈண்டு, அவரது சமயக் கொள்கைகளை அவரது திருவாக்கின் துணைகொண்டே சற்று ஆராய்வாம். முதலில், இவர் சைவ சித்தாந்தத்தின் முக்கிய அமிசமான பதி பசு பாசமாகிய முப்பொருளுண்மையையும் அவற்றின் சேர்க்கை வகையையும் ஒப்புக்கொள்கிறுர். இவரியற்றிய திருப்புகழில், "ஏழை நானுன் பதிபசு பாசோபதேசம் பெறவேணும்" என்றும், "தமியேனும் கதிபெற ஈடருதன பதி பசு பாசமானவை கசடற வேறு வேறு செய்தருள்வாயே" எனவும் கூறுவதால் மேற்கூறிய கருத்துத் தெள்ளிதின் புலப்படும். இனி இவர் முருகனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டமையைச் சிறிது கவனிப்போம்.

"மங்குலின்புறுவானுய்...காலாய்...தீயாய்...நீராய்...பாராய்...நீயாய் நானுய் மலரோனுய்...சங்கரர்தாமாய் ஒன்றினுங் கடைதோயா...பெருமாளே" என்று கூறுவதும், "அகரமுமாகி அதிபனுமாகி...அயனெனவாகி அரியெனவாகி அரனெனவாகி அவர்மேலாய் இகரமுமாகி எவைகளுமாகி இனிமையுமாகி வருவோனே" என்று கூறுவதும் காண்க.

மேலும், "நமசிவயப்பொருளானே ரசதகிரிப் பெருமாளே" என்றும் கந்தரநுபூதியில் 15-ம் பாட்டில், "எண்குணபஞ்சரனே" என்றும், கந்தரலங்காரத்துள் 55-வது பாட்டில் "ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருகன் உருவங் கண்டு" என்றும், வேடிச்சி காவலன் வகுப்பில் "அமலனுமெனக்கரசு மதிகுணனும் நிர்க்குணனும்...... யோகப் புராதனனும்...மலமிலியும் நிஷ்களனும்...வேடிச்சி காவலனே" என்றும் கூறுவதால், முருகவேளே பிரணவப் பொருளும் பஞ்சாக்கரப் பொருளும் என்றும், அவனுக்கு யோகமூர்த்தம் போகமூர்த்தம் உண்டென்றும், சகளமாகவும் நிஷ்களமாகவும் அவன் விளங்குபவனென்றும் இவர் ஒப்புக்கொண்டு, சிவஞான சித்தியாரில் கூறப்படும் பதியிலக்கணத்தையும், தனக்குத்தானே மகனாகிய தத்துவன்" எனத் தணிகைப் புராணமும் (வீரட்டகாசப்படலம்) "ஆதலின் நமதுசத்தி அறுமுகன் அவனும் யாமும் பேதகமன்று" எனக் கந்தபுராணமும் கூறும் உண்மையையும் தெளிவாக விளக்குகின்றார் என்பது நன்கு புலனாகின்றதன்றோ ?

அடுத்து, சிவமும் சத்தியும் பிரிப்பின்றி நிற்கும் தன்மையை, சில பாடல்களில் சிவசத்தியை ஆலமுண்டவளென்று குறித்தும், திரிபுரதகனி என்று குறித்தும் விளக்கிப்போந்தார். திருப்புகழ் படிக்கும் சில அந்தண அன்பர்கள், "அருணகிரிநாதர் சைவசித்தாந்தி யல்ல; வேதாந்தியே" எனக் கூறிவருகின்றனர். இதற்குச் சிறிதேனும் ஆதாரமில்லை. இவர் "ஆணவ மாயை கருமமலங்கள் போயுபதேச குருபர சம்ப்ரதாயமொடேயு நெறியது பெறுவேனோ" என்பதால் மும்மலங்களையும், திரோதமலத்தையும், "ஆறுறையும் நீத்ததன்மேல் நிலையைப் பேருஅடியேன் பெறுமாறுளதோ" என்று கந்தரநுபூதி 47-ம் பாடலிற் கூறுவதால் தத்துவங்கள் 36 என்பதையும் அவற்றைக் கடந்த நிலையே பெறவேண்டிய பேறென்பதையும், பல பாடல்களிலுள்ள குறிப்புக்களால் தத்துவதாத்விகத் தொகை தொண்ணூற்றாறென்பதையும் இவர் ஒப்புக்கொள்வது நன்கு அறியப்படும். மேற்கூறிய குறிப்புக்களெல்லாம் சைவ சித்தாந்தத்துட் கூறப்படும் முக்கியமான கொள்கைகளாம். சைவ சித்தாந்தக் கருத்துக்களை

அடிக்கடி கூறும் அருணகிரியார் எவ்வாறு வேதாந்தியாக இருத்தல் கூடும் ?

மேலும் அருணகிரியார் தமது பாடல்களில் பலவிடங்களில் சைவ சமய குரவர்களாகிய ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர் ஆகியோரைக் குறித்துச் சிறப்பித்துள்ளார். அவர் சங்கராசார்ய சுவாமிகளேயோ, அவரது வேதாந்த சீடர்களையோ குறித்தாரில்லை. எனவே அருணகிரியார் ஆழ்ந்த ஒசைவ சித்தாந்தியே என்பது வெள்ளிடைமலை. பல பாடல்கள் இவருக்கு ஐந்தெழுத்திலுள்ள பெரும்பற்றையும் பிரணவத்திலுள்ள பற்றையும் புலப்படுத்துகின்றன. " அடியேனும் அறிவுளறியும் அறிவூற அருள்வாயே " என்றும், " அறிவை அறிவாலறிந்து நிறைவாகி" என்றும், "அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே " என்றும் கூறி, சிவஞான சித்தியாரில் எட்டாவது சூத்திரத்து " அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே அறிவுதனை யருளினு லறியாதே யறிந்து " என்ற 30-வது பாட்டின் கருத்தை இவர் விளக்கியுள்ளது பெரிதும் வியக்கத்தக்கதே. முடிவாக, கந்தரலங்காரத்து 31 வது பாடலில், "பொக்கக் குடிலிற் புகுதா வகைப் புண்டரிகத்தினுஞ் செக்கச் சிவந்த கழல் வீடு தந்தருள் " என இவர் சைவசித்தாந்த முத்தியாகிய திருவடிப்பேற்றை வேண்டுவதும் இவர் சைவ சித்தாந்தியே என்பதை வலியுறுத்துகின்றது.

நூற்றுக்கணக்கான பாடல்களில் இராமாயண பாகவத பாரதச் செய்திகளை மிக விரிவாகக் கூறுவது இவரது பரந்த சமரச நோக்கினையே குறிக்கின்றது. மேலும், பற்பல பாடல்களில் இவர் திருமாலையும் பிரமனையும் சிறப்பித்துக் கூறியுள்ளார். ஆயின் முடிவில் அத்தகைச் சிறப்புக்களமைந்த திருமாலது மருகோனே என்றும் பற்பல சிறப்புக்கள் வாய்ந்த அயனும் அரியும் வணங்கும் முருகோனே என்றும் கூறி, அறுமுகப் பெருமானையே புகழ்ந்து வணங்கியுள்ளார்.

——

# நாலாயிரப்பிரபந்த விசாரம்

பாம்பன் ஸ்ரீமத் : குமரகுருதாச சுவாமிகள்

(மலர்–28 ; இதழ்–6 ; 224–ம் பக்கத் தொடர்ச்சி)

## (௲) கேசவார்த்த மூர்த்தியைத் துதித்த ஆழ்வார் அர்த்தநாரீசுவர மூர்த்தி தரிசனத்தையும் விரும்பினாரேன்பது.

நம்மாழ்வார் திருவாய்மொழி - பாமரு என்றற் றொடக்கத்துப் பத்தின் எ-வது பாட்டு, (3398)

"என்றிருமார்பன் றன்னை யென்மலைமகள் கூறன் றன்னை
யென்றுமென்னுமகளை யகம்பாற் கொண்ட நான்முகனை
நின்ற சசிபதியை நிலங்கீண் டெயின் மூன்றெரித்து
வென்று புலன்றுறந்த விசும்பாளியைக் காணேனே."

இதனில் 'என் மலைமகள் கூறன்றன்னை' 'எயின் மூன் றெரித்து வென்று' எனுஞ் சொற்கள் மலைமகளாகிய ஸ்ரீ பார்வதி தேவியாரை அர்த்த பாகமாக இடப்புறத்தில் வைத்துள்ள பரமசிவனை எனவும், வெள்ளிமதில் பொன் மதில் இரும்பு மதிளென்பவற்றாற் சூழப்பட்ட முப்புரங்களை யெரியும்படி செய்து வென்றவனை எனவும் பொருடரு மாற்றான் அர்த்தநாரீசுவரராகிய பரமசிவனைக் "காணேனே" என்று தரிசனம் விரும்பினமை காண்க. இது துதியுமாம்.

" கூற்றொருபான் மங்கையான் * * * * காப்பு" (2155)

என்று பொய்கையாழ்வாரும் புகன்றார். "வாம பார்சுவே உமாதேவி" என்று யஜுர்வேதத்து உருத்திர இருதயோப நிஷத்திற் சொல்லப்பட்ட இந்த அர்த்தநாரீசுவர மூர்த்தம் ஸ்காந்தத்துச் சங்கர சங்கிதையிற் சொல்லப்படுகிற உரு - மாஹேசுவர மூர்த்தங்களில் ரு-வது மூர்த்தமாகும். இஃது ஆண் பெண் ணென்னு மான்மாக்க ளொன்றுபட்டுப் பிரியத்தோடும் வாழ்வதற்காக வேற்பட்ட மூர்த்தமாம். விஷ்ணு மூர்த்தியோ டொன்றுபட்டிராத இம் மூர்த்தியை ஆழ்வார் விரும்பித் துதித்தமையால் விஷ்ணுவைப் பற்றி யிராதபோது பிரமருத்திரர்கள் பகவத்ஸ்தோத்திராதிகளுக்கு யோக்கியரா யிரார்களென்ற வைணவருரை வசையுரை யாயிற்றென்க.

## சங்கை நிவர்த்தி

திருவாய்மொழி—"புகழுநல்" என்றெழும்பத்தில் (2931) "குன்றங்களனைத்து மென்கோ-மேவுசீர் மாரியென் கோ விளங்கு தாரகைகளென்கோ" எனவும் ஆழ்வார் கூறும் வழி இங்கே விஷ்ணு விபூதியிற் சிவனையும் வைத்து வழுத்தினு ரென்னின் யாவையும் தெய்வ விபூதியில் வைத்துச் சொல்வது தெய்வத்தைப் புகழ்வதேயாம். மூர்த்தி முறையில் ஒரு மூர்த்தியைச் சுட்டி அவனைக் காணேனே வென்பது அவ் விபூதிப் புகழிற் சேராது. அந்த எ-வது பாட்டில் அவ் விதப் பொருள் கோடற்கு விவரமுமில்லை. "குன்றங்க ளனைத்து மென்கோ" என்ற ஆழ்வார் அங்ஙனங் குன்றங்க ளனைத்தையுங் காணேனே, (மழை) மாரியைக் காணேனே, (நக்ஷத்திரம்) தாரகைகளைக் காணேனே வெனும் பொரு டோன்றக் கூறுராயினர். அதனாலும், அவ்வாறவர் யாண் டுங் கூறுமையானும் அது வழக்காகாது.

இங்கே, ஆழ்வாருக்கு விஷ்ணுவெனுந் தெய்வமொன் றிருப்ப அவர் வேறு தெய்வமும் விரும்புவாரோ வென்னின், அவ் விஷ்ணு மூர்த்திக்கு வேருயுள்ள அரன் அயனாதி மூர்த்திகளால் தங் கொள்கைக்கேதேனும் இடையூறுண் டாகுமோ வென்றஞ்சி யப்படி விரும்புவரென்க. எல்லா முணர்ந்த ஆழ்வாருக்கு அது கருத்தாகுமோ வென்னின், திருவாய்மொழி "வளவே"ழென் றெழும்பத்தின் எ-ல் (2725) "அடியேன் சிறிய ஞானத்தன்" "திருமாலை அடியேன் காண்பா னலற்றுவன்" (2725) எனவும், "சீலமில்" என்றெழும்பத்தின் ச-ல் (3076) "நாணமிலாச் சிறுதகையேன்" எனவும் கூ-ல் "மடவன் னெஞ்சங் காதல் கூரவல் வினையே னயர்ப்பாய்த் தடவுகின்றேன்" எனவும், (3081) ஆழ்வார் தம்மைச் சொல்லிக்கொண்டமை யால் அவரெல்லா முணரா ராகின்முராகலின் அவர்க்கது கருத்தாகுமென்க. அஃதாமாயின், அரன் அயனாதியர் தாழ்ந்தவரெனும் பொருள்படத் திருவாய்மொழி— "திண்ண"னென் றெழும்பத்தின் க0-ல் (2805) "வெள் ளேற னான்முக னிந்திரன் வானவர் - புள்ளூர்தி கழல்

பணிந்தேத்துவரே" என்று ஆழ்வார் கூறுவரோ வென்னின், அவர் பாட்லிற் சிற்சில விடங்களிற் சில சுவடித் துணிபுகொண்டு அவ்வாறு கூறுவரென்க. ஐயத்தினுலும் அச்சத்தினுலும் முற்சொற்றபடி சிற்சில விடங்களில் அம் மூர்த்திகளைத் துதித்து விரும்புவரென்க. விரும்புவரென்னின், திருவாசிரியத்தில், (2584) "பெருமாமாயனை யல்லது- ஒருமா தெய்வ மற்றுடையமோ யாமே" என நம்மாழ்வார் நவின்றவா றென்னை யெனின், திருவாய்மொழி முடியானே யென்றெழும்பத்தின் (2975) உ-ல் "குறளாகிய-வஞ்சகனே யென்னு மெப்போது மென் வாசகமே" என்ற அவர் அவ்வளவி னில்லாமற் பின்பு எவ்வளவு வாசகமோ சொல்லினமையானும், சன்மமென் றெழும்பத்தின் க-ல் (2996) "நானோர் குறைவிலேனே" எனவும், (2997) உ-ல் "யானோர் முட்டிலேனே" எனவுங் கூறியவற்றிற்கு மாருகப் பின்பு "நாணமிலாச் சிறுதகையேன்" அயர்ப்பாய்த் தடவுகின்றேன், "காணேனே" என்று குறைவு முட்டுக் கூறிக் கொள்கின்றமையானும் இவற்றின் பின்னே வார்கடா என் றெழும்பத்தின் அ-ல் (3487) "புகழுமா றறியேன்" என்கின்றமையானும், இப்பெற்றி பல செய்யுளகத்துங் காணப்படுகின்றமையானும் அஃதொரு வரம்பு பற்றிச் சொன்ன கட்டுரையன்றென்க. நிற்க, இங்கே அரனுதியரை விஷ்ணுவின் விபூதியில் வைத்து ஆழ்வார் துதித்தாரெனுமிடத்தும் விஷ்ணுவைப் பற்றியிராதபோது பிரம ருத்திராதிகள் பகவத் ஸ்தோத்திராதிகளுக்கு யோக்கியராயிராரென்னும் வைணவர் வாசகம் "சிவனுந் தேவனு" என்ற தீய கிறிஸ்தவர் வாசகத்தோடொன்றி மொழிதல் தப்பாதன்றோ? இது கிடக்க.

மேலே காட்டப்பட்ட எ-வது பாட்டில் (3398) "நின்ற சசிபதியை" 'விசும்பாளியை' என்றெழுந்த வாக்கியங்கள் இந்திரனை விளக்கும். இத்தேவனையும் வழுத்திய ஆழ்வார் விஷ்ணுவின் வியூகமெனப்படும் வாசுதேவ - சங்கர்ஷண - பிரத்தியும்ந - அநிருத்த மென்பவற்றை நிரலே அப்பெயர் கொண்டு யாண்டும் வழுத்தாமை

யாலும், அவ்விதமே மற்றை யாழ்வாரும் வழுத்தாமை யாலும் அவையிற்றை வெளியிடும் பாஞ்சராத்திராகமம் அவர்க் குடம்பாடன்றென்பதும் ஈண்டுணரற் பாலதே.

(மூன்ருவது அதிகார முற்றிற்று)

---

## நான்காவது அதிகாரம்

### (ச) அர்த்தநாரீசுவா தரிசனம் விரும்பிய ஆழ்வார் மூர்த்தித் திரயமேனும் திரிமூர்த்தியையுந் துதித்தா ரேன்பது.

நம்மாழ்வார் திருவாய்மொழி முனியே யென்றற் ருெடக்கத்துப் பத்தின் க-வது செய்யுளில், (3766)

"முனியே நான்முகனே முக்கண்ணப்பாவென்
பொல்லாக் கனிவாய்த் தாமரைக்கட் கருமாணிக்கமே
யென்கள்வா * * * * ஒன்று மாயஞ்
செய்யே லென்னையே"

என்றது 'நான்முகனே' 'முக்கண்ணப்பா' 'கரு மாணிக்கமே' என்பவற்ருல் முறையே அயன் அரன் அரி யெனு மூவுருவையும் விளக்கிச் செய்யேல் எனும் ஒருமை யால் அவையொரு மூர்த்தியெனும் பொருளுந் தந்தது.

மேற்படி பாமரு என்றற் ருெடக்கத்துப் பத்தில், (3394)

"காத்த வெங்கூத்தாவோ மலேயேந்திக் கன்மாரிதன்னை
பூத்தண்டுழாய் முடியாய் புனைகொன்றை யஞ்சடையாய்
வாய்த்தவென் ஞன்முகனே வந்தென் ஞருயிர் நீயாஞல்"

என வருவதும், 'துழாய் முடியாய்' 'கொன்றையஞ் சடையாய்' 'நான்முகனே' என்பவற்ருல் முறையே அரி அரன் அயனெனு மூவுருவையும் விளக்கி 'நீயாஞல்' எனும் ஒருமையால் அப் பொருளேயே பயந்தது.

மேற்படி வார்கடா வென்றற் ருெடக்கத்துப் பத்தில், (3489) "அமர்ந்ததண் பழனத் திருச்செங்குன்றூரிற் றிருச் சிற்ருற்றங் கரையானை-யமர்ந்த மாயோனை முக்கணம்மானை

நான்முகனை யமர்ந்தேனே" என வருவதும் அப்பொருளையே பயந்தது. "த்ரிவக்த்ரம் திரிகுணம் ஸ்தாநம்" என்று யஜுர் வேதத் தேஜோபிந்தூபநிஷத்திற் சொல்லப்பட்ட இந்த மூர்த்தித்திரயம் வலப்புறத்திற் பிரமனையும் இடப்புறத்தில் விஷ்ணுவையுங் கொண்டு நடுவில் நான்கு தோளும் மூன்று விழியும் விளங்கவுள்ளது. ஆன்மாக்களுக்குச் சாக்கிர சொப்பன சுழுத்தியென்னு மூன்றவஸ்தைகளை யுண்டாக்கவும் ஒழிக்கவுமேற்பட்ட இது (உ௫) மஹேசுவர மூர்த்தங்களில் அ-வது மூர்த்தமாம். இம் மூர்த்தி விருத்தாந்தத்தை:—

"த்ரிமூர்த்திமூர்த்திமாதத்தேபகவாநீச்வரோதய:
ஆத்மாநோவிததோமூர்த்தித்ரயம்விந்தந்த்யயத்நச: ||"

எனும் ஸ்காந்த வசனத்தானுமறிக. இந்நியாய முணர்ந்தே, இம் மூர்த்தியைத் துதித்து நின்ற ஆழ்வார்.—

சங்கை நிவர்த்தி

திருவாய்மொழி—"பத்துடை"யென் றெழும்பத்தில், (2703)

"ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவினுணின்ற
நன்றெழினாரண னான்முக னரனென்னு மிவரை
யொன்ற நும்மனத்து வைத்துள்ளி நும்மிரு பசையறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே"

என்றெழுந்தவிதனை எ-வது செய்யுளாக வுரைத்தார். இதில் "இருபசையறுத்து" என்றுள்ள சொற்கு நான்முகன் அரனென்னு மிருவரையு நீக்கியென்று ஒரு வைணவர் அர்த்தஞ் செய்தாரென அறிகின்றேம். அந்த அர்த்த முண்மையாயின் மேலே காட்டப்பட்ட செய்யுளுரைகட்குக் கதியென்னையோ! அன்றியும் இதன் முந்நூற்ற அதிகாரத்துழை "நின்ற சசிபதியை" "விசும்பாளியைக் காணேனே" என்று இந்திரனைக் குறித்தெழுந்த ஆழ்வாருரைகட்கு வழியென்னையோ !! அன்றியும் காட்டிய எ-வது செய்யுளை முன்னர்க் கொண்டுள்ள திருவாய்மொழியின் கடைப்பதிகத்து முதற் செய்யுளிலன்றோ "முனியே நான்முகனே முக்கண்

ணப்பா" எனும் விளியுரைகளெழுந்தன. அன்றியும் அக் கடைப் பதிகத்துக் கடைக்கவியி னன்றே, (3776)

"அவாவறச் சூழரியை யயனை யரனை யலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவா விலந்தாதிகளா லிவையாயிர முமுடிந்த"

எனும் முடிபுரைகள் பிறந்தன. இவற்றில் நான்முகனை யும் அரனையு நீக்கி நிகழ்த்தியதுண்டா ? இல்லையே. இன் னன எதுக்களால் அவ்வைணவர் அர்த்தம் அநர்த்தமா மென்க. அற்றேல், 'இருபசையறுத்து' என்றதற்குரிய பொருள்தானென்னை யெனின், உட்பற்று புறப்பற்றெனும் இருவகைப் பற்றையும் ஒழித்தென்பதே பொருளென்க. அரி அயன் அரனென்னு மூவரையுந் தியானித்தாற்றான் அவ் விருபற்று மறுமென்றுணர்ந்துரைத்த ஆழ்வார் தாம் உரைத்த படி முடிவுபெறுங்காறுஞ் சாதித்தா ரென்பதை "அவா வறச் சூழரியை யயனை யரனை" என்றெழும் அவ்வீற்றுப் பாட்டு இனிது காட்டுதலால் யாங்கூறும் பொருளையே அவை பயக்குமென்றல் பசுமரத்தாணியா மென்க. இவ் வுண்மைப் பொருள் சிவத் துவேஷ புத்தியுடைய வைணவ ரெவர்க்கும் நஞ்சுபோலும். அவா, பசை, பற்று என் பவை யொருபொருட் கிளவிகள். அந்த எ-வது செய்யு ளில் உள்ளி என்றது தியானித்தெனும் பொருட்டு. அது 'இவரை யொன்ற நும்மனத்து வைத்துள்ளி' என்பத னனே நனியுறுதிப்படும். ஈண்டு, மூவரையுந் துதித்துய்ய வுடம்பட்ட ஆழ்வார் பத்துடை யெனுந் தொடக்கத்துப் பத்தில் (2701) "புறநெறிகளைகட் - டுணக்குமின்" என்று ஏவியதென்னையெனின், சாக்கிய சமணாதிபுறச் சமயங்களை நோக்கியபடி யேவினு ரென்க. இவ்வாறு கொளாவிடில், ஆழ்வாரே முன்னுக்குப்பின் முரணிக் கூறுகின்றுரென்பது ஏற்படும். உய்த்துணர்க.

ஈண்டொன்று உணரற்பாலது : என்னை ? திவ்விய சூரி தலைவரெனுஞ் சேனை முதலியாரது அமிசமாகப் பெரிய வண்குருகூரில் தொண்டக் குலத்துக் காரியாருக்கும் அவர் மனைவி உடைய நங்கையார்க்கும் புத்திரனுகப் பிறந்தவ

ரெனப்படுஞ் சடகோபராகிய நம்மாழ்வார் தம் பாடல்களில் ஏதேது கூறியிருப்பினும் அவர் கூறிய முடிவான பதிகத்து முடிவான செய்யுளில் "அரியை யயனை யரனை" என்றெழுந்த தெய்வ மொழிகளில் 'அரன்' என்பதொன்றே முடிவினிற்கின்றது. அது "சிறப்புடைப் பொருளைப் பிற் படக் கிளத்தல்" எனுஞ் சூத்திரப்படி அரியயனென்னும் இருமொழிக்கும் பின்னே நிறுத்தப்பட்டதாயிற்று.

அதன் பின்னுள்ள சொற்களில் தெய்வமொழியா தொன்றுமில்லாமையானும் இத்திற முடிவு பெற்றுள்ள இதனையறிந்தோர் உயர்ந்தோரெனும் பொருளுற "இப் பத்தறிந்தா ருயர்ந்தே" எனுஞ் சொற்களே யிறுதியி னிற்கின்றமையானும் யாம் துலக்கியதே துணி பொருளாயிற்று. ஈங்கே அரியினுந் தாழ்ந்த அயனை அவ் வரிக்குப் பின்னே ஆழ்வார் நிறுத்தியதும் அச்சூத்திரப்படி சிறப்புடைப் பொருளென்பது கொண்டு தானே வென்னின், ஒருவழியில் முற்படக் கிளத்து பொருளுஞ் சிறப் புடைத்தென்பது கொண்டும் அதனினும் பிற்படக் கிளத்து பொருள் சிறப்புடைத் தென்பது கொண்டும் இதுவே முத்தி நிலைக்குங் கோடற்பாலதென்பது கொண்டும் அரிக்கும் அரனுக்குமிடையில் அவரிற்றாழ்ந்த அயனைவைத்தது பொருத்தமாமென்க. இனி, ஆழ்வார் முடிவுக்கு நாராயண நாம மில்லாமையாலோ அரனெனுஞ் சொல்லைக் கூறிக் கொண்டாரென்னின், அந் நாமத்தால் அவர் அவாவற்று வீடுபெற்றமை அம்முற்றுச் செய்யுளிற் கூறப்படவில்லை யாகலின் அது கேள்வியாகா தென மறுக்க. இனி, அவ் வாழ்வாருக்கு அந்நாமமிருப்பினும் இல்லாவிடினும் அவர் எம் மூர்த்தியை யெவ்வாறு நிறுத்திக் கூறினும் யாதோ ரான்மா அந்திய காலத்தில் எச் சொல்லைச் சொல்லி யெதனை நினையுமோ அச்சொல்லுக்குரிய அதனை அஃதடையுமெனுஞ் சுருதியாதி தொன்னூல்களின் துணிபின்படி அரனென்னுந் தெய்வமொழியானது அவர் வாக்கினின்றும் முடிபாக வெழுந்ததனாலே அதன் மகிமையே அவர் விரும்பிய வைகுண்டத்தில் அவரை யுய்த்திருக்கும். அதிற் சந்தேக

யில்லை யென்பதூஉம், அவரை அரனடியவராகிய பெரியா ரென்னலா மென்பதூஉம் விவேகிகளுணரத் தக்கனவே. தீத்தொழிற் சிந்தையனுய், பிடுங்கு – அடி – கொல் எனும் அருத்தத்தைப் பயக்கும் ஆகர - பிரகர - சங்கர எனுமொழி களைத் தன்மகனுக்கு அந்தியகாலத்தில் ஒதிபிறந்த ஒரு வேடனுக்கும் அச் சொற்களிலுள்ள 'அர'சப்த மகிமை யானது அவனை (இயமலோகஞ் செல்லாது காத்துக்) கைலாய மடையும்படி செய்த வரலாற்றினை ஸ்காந்த உப தேச காண்டத்துச் சிவநாம மான்மியம் அறிவிக்கும் ஆற் ருனே அந்த அரசப்த மகிமையும் அறியலாவதே. நிற்க.

முன்னர் விளக்கிய மூர்த்தித்திரயத்தில் நடுவேயுள்ள அரனுர்க்கு இடப்புறத்தில் நாராயணரும் வலப்புறத்திற் பிரமனுருமிருத்தலின் நாராயணரைப் பிரமனுர் பற்றியிராதவ ராயினுர். இவரை 'நான்முகனே' என ஆழ்வார் துதித் தமையால், பிரமருத்திரர்கள் நாராயணனைப்பற்றியிராத போது அவர்கள் பகவத் ஸ்தோத்திராதிகளுக்கு யோக்கிய ராயிரார்களென்னும் வைணவர் வார்த்தை இங்குங் கனம் பெற்றிலது. பிரமருத்திரர்கட்கு வேருக நாராயணரை நவிலும் அவ்வார்த்தை நாராயணர் பூரணரல்லரென்பதை புணர்த்துவதுமாம்.

(நான்காவது அதிகார முற்றிற்று)

---

## (ரு) மூர்த்தித் திரயத்தைத் துதித்த ஆழ்வார் மும்மூர்த்திகளி லோருவரான உருத்திரமூர்த்தியையுந் துதித்தா ரேன்பது.

நம்மாழ்வார் திருவாய்மொழி - "கங்குலு"மெனுந் தொடக்கத்துப் பத்தின் - க0-வது பாட்டில், (3357)

> "முடிவிவடனக் கொன்றறிகிலே னென்னும், மூவுலகாளியே
> யென்னுங் - கடிகமழ் கொன்றைச் சடையனே யென்னு
> நான்முகக் கடவுளே யென்னும் வடிவுடை வானோர்
> தலைவனே யென்னும் வண்டிருவரங்கனே யென்னும்"

என்றெழுந்த வாக்கியங்கள் திருவரங்கத்துப் பெருமாள்

மீது மோஹங் கொண்டிருந்த மகள் செய்கைகளைத் தாயானவள் அப்பெருமானுக் குரைப்பதாக ஆழ்வாராற் சொல்லப்பட்டனவாம். சொல்லியவற்றுள் 'கடிகமழ் கொன்றைச் சடையானே' என்றது நறுமணங் கமழுங் கொன்றைக்காய் போல் நீண்ட சடையுடையானே யென்று உருத்திர மூர்த்தியைத் துதித்தல் காட்டிற்று. சிவபெருமானுக்குச் சென்னியிற் சடையுள்ளதுபோல உருத்திர மூர்த்திக்கும் அஃதுண்டென்பதை ஸ்காந்தத்து உபதேச காண்டம் எச-ம் அத்தியாயம் நிக-ம் சுலோகத்தில் "சிவனுக்குரிய நாமம் சின்னம் செயலென்பன உருத்திரமூர்த்திக்கும் எற்பட்டிருக்கின்றன" எனவரு முரைகளானும் அறிக.

சங்கை நிவர்த்தி

கொன்றைச்சடையனே யென்பதுள்ள இச்செய்யுளில் 'மூவுலகாளியே' என்பதும், 'நான்முகக் கடவுளே' என்பதுங் காணப்படுதலினுல் முற்போந்த ச-வது அதிகாரத்தில் விளக்குற்ற "மூர்த்தித்திரயத்தை" யே இங்குந் துதித்தாரென்றலாகாதோ வென்னின், அவ்வதிகாரத்திற் காட்டப்பட்ட செய்யுள்களில் ஆழ்வார், மூவுருவையும் விளக்கி அவையொரு மூர்த்தியெனற்கு, ஒருமைச் சொற்களுந் தந்தமைபோல இச்செய்யுளில் தாராமையாலும், நான்முகக் கடவுட்குப் பின்னே 'வானோர் தலைவனே' என இந்திரனை விளித்துத் துதித்தமையாலும், அம்மூவுருவரோடு இந்த இந்திரனுஞ் சேர்ந்துள்ள ஒரு மூர்த்தியில்லாமையாலும், அதனுல் நால்வரையுந் தனித்தனி துதித்ததென்பதே யேற்படுகின்றமையாலும், அவ்வாருகா தென்க. இவ்விஷயம் முதலதிகாரத்துஞ் சொல்ல நேரிட்டுச் சொல்லினேம். காட்டிய செய்யுளில், 'திருவரங்கனே' என்பது மூவுருவும் ஒருவனேயென்னு மொருமையைக் காட்டாதோ வென்னின், அம்மொழிக்கு முன்னே 'வானோர் தலைவனே' என்னும் இந்திரசப்த மிருத்தலினுலும், அப்பதிகச் செய்யுடோறும் அத்திருவரங்க னெனுஞ் சொல்வருதலினுலும் அஃதப்படிக் காட்டா தென்க. இங்கே விஷ்ணுமூர்த்தியை நீக்கிப் பிரமருத்திரேந்திரரை ஆழ்வார் யாண்டுந் துதித்தது காணப்பட

வில்லையே அதனால் அவரையவர் தனித்தனி துதித்தாரெனல் ஏற்படுங்கொல்லோ வெனின், மூர்த்தியொழுங்கில் ஒவ்வொருவரையும் விளித்துத் துதித்தல் அவ்வாறு துதித்ததேயாம். துதிக்கும் ஆழ்வார் வைகுண்டாதிக்யமே பெற வேண்டுமெனுஞ் சித்தமுடையராதலின், அதற்குரிய நாராயணஸ்துதியில் மற்றை மூர்த்திகளையும் அவர் ஆங்காங்குத் துதித்துவருவதற்குக் காரணம் ஐயமும் அச்சமுமாமென்று ௩-வது அதிகாரத்துழைச் சால விளக்கினேம். ஆழ்வார்க்குள்ள ஐயத்தைத் திருவாய்மொழி - பத்துடை யெனத் தொடங்கும் பத்தில் (2702) "உணர்ந்துணர்ந் துணரிலு மிறைநிலை யுணர்வரிது" என்பதூஉம் இனிது புலப்படுத்தும். நுனித்தமதி கொண்டுணர்க.

உணர்வதில், இங்கே மூவுலகாளியே யென்று விஷ்ணு மூர்த்தியை முற்படக் கிளத்துதலால் அம்மூர்த்தி மற்றை மூவரினு முயர்ந்தவராவர் கொல்லோ வென்னின், அவ்வாழ்வார் விஷ்ணுமூர்த்திக்கு முன்னே அரனையும் அயனையுங் கிளத்தினமைக்கு "நான்முகனே முக்கண்ணப்பா* * * தாமரைக்கட் கருமாணிக்கமே" என்றதூஉம், விஷ்ணு பிரமர்கட்கு முன்னே அரனைக் கிளத்தினமைக்கு "ஏருரு மிறையோனு நான்முகனுந் திருமகளுங் - கூருளுந் தனியுடம்பன்" (3084) என்றதூஉம், நான்முகனுக்கு முன்னே அரனையும் அரியையுங் கிளத்தினமைக்கு மேலே காட்டிய கo-வது பாட்டோடு "அமர்ந்தமாயோனை முக்கணம்மானை நான்முகனை" என்றதூஉம் 'அரனாரணன்' என்று பொய்கையாழ்வார் புகன்றதூஉம், பிறவுங் காட்டாக நிற்றலினால் அவ்வாருதற் கிடனில்லை. ஆனால் மூவருக்கும் பின்னே இந்திரனைக் கூறிவரூஉம் வழக்கு மலிந்திருத்தலால் அம்மூர்த்தி அவரிற்றாழ்ந்த மூர்த்தியென்பது அவ்வாழ்வார் கருத்தென்றல் புலப்படுகின்றது.

இனி, ஆழ்வார் அந்நான்கு மூர்த்திகளையும் விஷ்ணுவாக வெண்ணித் துதித்தாரென்று கூறினாலோ வென்னின், அப்படிக் கூறுதலாலும் பிரமருத்திரர்கள் நாராயணரைப் பற்றியிராதபோது அவர்கள் பகவத் ஸ்தோத்திராதிகளுக்கு

யோக்கியரா யிரார்களென்னும் வைணவர் வார்த்தை மணம் பெருதொழிதல் வாய்மையன்றே.

(ஐந்தாவது அதிகார முற்றிற்று)

---

## ஆருவது அதிகாரம்

### (சூ) விஷ்ணுமூர்த்தியும் அவரடியவரும் சிவசின்ன தாரணர்களேன்பது

நம்மாழ்வார் "திருவாய்மொழி வீற்றிருந்தே" ழென்றற்ருெடக்கத்துப் பத்தின் சூ-வது செய்யுளில்,

" கரியமேனி மிசைவெளியநீறு சிறிதேயிடும்
பெரியகோலத்தடங் கண்ணன் " (3056)

என வருஉம் இதில், வெள்ளிய திருநீற்றை யணியுந் திருமேனியை யுடையவர் விஷ்ணுமூர்த்தி யென்பது வெளியாயிற்று.

பெரியாழ்வார் திருமொழி காப்பிடற் பதிகத்தில், "காப்பிடவாராய்" "காப்பிடவாராய்" என்று சொல்லிக் கொண்டு வருவனவும் அசோதாதேவி கண்ணபிரானுக்குக் காப்பெனுந் திருநீறணிந்தமையை விளக்குவனவாயின.

நம்மாழ்வார் திருவாய்மொழி—" பயிலுமென்றற்" ருெடக்கத்துப்பத்தின் சு-வது செய்யுளில், (2966)

" உடையார்ந்த வாடையன் கண்டிகையனுடைய
நாணிலன் * * * * நடையாவுடைத் திருநாரணன் "

எனவருஉம் இதில், " கண்டிகையன் " என்பது கண்டிகை யெனப்படும் உருத்திராக்க மாலையைத் தரித்துக்கொண்ட நாராயணமூர்த்தி யென்பதை விளக்கிற்று.

#### சங்கை நிவர்த்தி

'நீறு' என்றதற்கு அஞ்சனச்சூரணம், கருப்பூரப்பொடி திருமண் என இக்காலத்து வைணவரிற் சிலர் அருத்தம்

பண்ணத் துணிகின்றனர். அவற்றென்றும் பொருந்தாது. ஏனெனின் அவற்றிற்கு நீறு என்று பெயர் வழக்கிலாவது செய்யுள் வழக்கிலாவது வழங்கப்படாமை யாலும், வட மொழிப்படி பஸ்மித்தெடுத்தது பஸ்மம், தென்மொழிப்படி நீற்றியெடுத்தது 'நீறு' எனுமிரண்டும் அந்நீற்றிற் கமையுமே யன்றி அவ்வஞ்சனச் சூரணாதிகளுக்கு அமையாமையாலும் ஈண்டு 'நீறு' என்பதற்கு அங்கத்திற் பூசப்படு பொரு ளெனும் அர்த்தந் தரத்தக்க "அங்கராகம்" என்று வைணவ ரெழுதிய ஆருயிரப்படியிலும் பன்னீராயிரப்படியிலு மிருத் தற்குப் "பொங்கராவெய்யின் மணிப்பூணும் பேணுநீற் - றங்கரா கமுமுவந்தணியு மேனியாய்" எனும் வில்லிபுத்தூ ராழ்வார் பாரதம் பதின்மூன்றாம் போர்ச் சருக்கச் செய்யுட் கூற்றுற் பரமசிவனைத் துதித்த கிருஷ்ணமூர்த்தி வாக்கினு லேயே திருநீறெனும் பொருளே வெளிப்படுகின்றமையாலு மென்க. நீற்று அங்கராகமென்னும் தொடர் நீறாகிய அங்க ராகமென்று பண்புத் தொகையாகக் கொள்ளப்படும்.

'வெளிய நீறு' என்பதனை, வெளியம்நீறு எனப் பிரிக்கு மிடத்தும் வெளியம் = அஞ்சனம், கருப்பூரமெனப் பொரு ளாதற்குப் பூர்வாதார மொன்றுமில்லை. 'கரியமேனி மிசை வெளிய நீறு' என்பதனை கரிஅம்மேனி மிசை வெளிய நீறு எனப் பிரிக்குமிடத்தும் வெளிய என்பது பொருந்த, தாவ எனும் பொருள் தரவுமாட்டாது. அங்ஙனம் நீறு என்பது விபூதி யல்லாத வேறெப் பொருளையு நீற்றுவதாயு நிற்கின் றது. இவ்விளக்கஞ் சைவபூஷண சந்திரிகையினு முண்டு. அறிக.

"பஸ்மதிக்தாங்காருத்ராக்ஷாபரண: தக்ஷிணஸ்யாந்திசி விஷ்ணு" என்று அதர்வண வேத பஸ்ம ஜாபா லோப நிடதத்தும்,

" சுசுபேஸததம்விஷ்ணுர்பஸ்மதிக்தகனூலத:|
த்ரிபுண்ட்ராங்கிதஸர்வாங்கோஜடாமகுடமண்டித:||"

என்று பிரமாண்ட புராணத்தும்,

" நாராயணஸ்தபஸ்தேபேஜடமுண்டசமேகலீ |
பஸ்மோத்தூளிதஸர்வாங்கஸ்த்ரிபுண்ட்ராங்கிதமஸ்தக ஃ||"

என்று காளிகா கண்டத்தும்,

" மாமங்கை வளர்மார்பன் * * • *
காமங்கைத் துள்ளுருக் நீராடி நீறணிந்து கண்டிபூண்டு "

என்று சூதசங்கிதை திருமாலகம்பாவ நீங்கி யாநந்தநடந் தரிசித்த அத்தியாயத்தும் வருவசனங்கள் விஷ்ணுமூர்த்தி விபூதி யணிந்தமையை விளக்கலானும்;

" ராமந்த்ரிணேத்ரக்ஸோமார்ததாரிணம்சூலிநம்பரம்
பஸ்மோத்தூளிதஸர்வாங்கம்கபர்த்திநமுபாஸ்மஹே ||"

என்று அதர்வணவேத ராமரஹஸ்யோபநிஷத்திலும்,

" த்யாத்வாரகுபதிங்க்ருத்தம்காலாநலமிவாபரம் |
பீதக்ருஷ்ணஜிநதரம்பஸ்மோத்தூளிதவிக்ரஹம் ||"

என்று இராமாயணத்திலும்,

" ஸ்வர்ணவர்ணஜடாபாரம்ஸாக்ஷாத்ருத்ரமிவாபரம் |
பஸ்மோத்தூளிதஸர்வாங்கம்த்ருஷ்ட்வாகாமவசம்கதக ||"

என்று அத்யாத்ம ராமாயணத்திலும் வருவசனங்கள் தசரத ராமமூர்த்தி விபூதி யணிந்தமையை விளக்கலானும்; அதர்வண வேத பிருகஜ்ஜாபாலோபநிஷத்தில்,

" ஸ்ரீகௌதமவிவாககாலேதாமஹல்யாம்த்ருஷ்ட்
வாஸர்வேதேவா ஃ காமாதுராஅபவர்ததாநஷ்டஜ்ஞாநா "

என்று தொடங்கிச் செல்லும் வசனங்களால் கௌதமருக்கும் அகலிகைக்கும் நடந்த விவாகத்திற் குழுமியிருந்த சர்வ தேவர்க்கும் அந்த அகலிகையின் பேரழகினல் மோஹ மதிகரித்துத் தாதுகலிதமான பாவ பரிகாரத்திற்கு அவர்கள் தூர்வாச முனிவர் கூறியபடி திருநீறணிந்தபோது அவ்விதஞ் செய்துகொள்ளும் வாசுதேவராகிய விஷ்ணுமூர்த்தியும்

"பஸ்மபக்ஷயதச்யுத:" எனும் அந்தச் சுருதிப்படி மருந்து போல உட்கொண்டதும் வெளியாகின்றபடியானும் ;

" தத்தாத்ரேயம்சிவம்சாந்தமிந்த்ரநீலநிபப்ரபம்|
ஆத்மாயாரதம்தேவமவதூதந்திகம்பரம்|
பஸ்மோத்தூளிதஸர்வாங்கம்ஜடாஜூடதரம்விபும்||"

எனும் அதர்வணவேத - சாண்டிலியோபநிஷத்து வாக்கியமும்,

" க்ருஷ்ணத்வைபாயநம்வ்யாசம்ஜடாமகுடமண்டிதம்|
பஸ்மோத்தூளிதஸர்வாங்கம்பஸ்மதிர்யகத்ரிபுண்ட்ரகம் ||

எனும் ஸ்காந்த புராணவாக்கியமும் விஷ்ணு அவதாரபுருஷர்களாகிய தத்தாத்ரேயரும், வியாசமாமுனிவரும் விபூதியணிந்தமையைத் தெரிவித்தலானும் ; இன்னும் ஸ்காந்தம் சைவம் பாத்மம் கூர்ம முதலிய புராணங்களிலும் சிவரகசியம் பாரத முதலிய இதிகாசங்களிலும் விஷ்ணுமூர்த்தியும் அவரவதார மூர்த்திகளும் விபூதியணிந்து சிவபூஜை செய்த விஷயம், அனேக சரிதங்களாக வெளிப்படுதலானும், ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகள் தேவாரத்தில் "வானவர் மேலது நீறு" என்றருளிச் செய்ததும் அச்செய்தி யாதலானும் மேல்விளக்கிய நியாய வாயிலாக (வேத அங்கீகாரமான) வெண்டிரு நீற்றையே 'வெளிய நீறு' என ஆழ்வார் கூறினரென்றறிக. விஷ்ணு மூர்த்தியும் வானவரிலொருவரே யென்பது பின்வரு பிரமாணங்களால் விளங்கும்.

பெரியாழ்வார் 'காப்பிடவாராய்' என்றதில் காப்பென்பதற்குத் திருமண்காப்பெனக் கூறலமையாதோ வென்னின், மஞ்சட் புண்டரத்தை யிகழ்ந்து சிவப்புப் புண்டரத்தைப் புகழும் வைணவரொருவர் "உடையவர் சூரண விளக்கம்" எனும் புத்தகத்தின் உகூ-வது பக்கத்தில் உகூ-வது வரி தொடங்கி ஸ்ரீ பெரும்பூதூரில் இவ்வருஷத்திற்கு அஎ0-வருஷமான கலி சக0அ-க்கு மேல் * * * * " திருவவதரித்தருளிய ஸ்ரீபாஷியக்காரர் காலத்திற்கு முன்பு,

இப்போதுள்ள வைணவர்கள் பஸ்மாதி தாரணராய் க்ஷுத்ர தேவாந்தர பரராய் மந்த்ராந்தர பரராயிருந்தார்கள். பின் நூதனமாக வெளியிட்டு அவைகளைத் திக்விஜயஞ்செய்து தாபித்தார் கிடாய்" என்றெழுதிக் காட்டினமையாலும், இந்நூல்முதலதிகாரத்திற் காட்டிய குருபரம்பராப்பிரபாவம் இளையாழ்வார் வைபவத்தில் இராமாநுஜருடைய சிறிய தாய் மகனுகிக் காளஹஸ்தியிலிருந்த கோவிந்தப்பட்டரை வைணவமதத்திற்றிருப்பச் சென்ற நம்பிக்கும் அப்பட்டருக்கு முண்டான தர்க்கங்க ளெழுதப்பட்ட விடத்தில் 'அவனுங் குறுக்கு நெடுக்காகில் பேத மென்னென்ன, இவருங் செவ்வையிருக்கத்திரியக்கு ஆகையே பேத மென்ன, அவனும் இது புதுவார்த்தைகட்டுகளோவென்ன, இவரும் பழைய வார்த்தைகட்டுகளுமிப்படியே யென்ன, அவனும் இதிலே பூர்வவிசாரம் வேண்டாவோ வென்ன, நம்பியும் பரத்துவத்திலே காண் விசாரமிருப்பதென்ன" என்றுள்ள வசனங்கள் - அவனும் என்பதைக் கோவிந்தப் பட்டரெனவும் இவரும் என்பதை வைணவ நம்பியெனவும் திரியக்கான பஸ்மத்திரி புண்டரத்திற்குப் பின்பு நெடுக்கான மண்புண்டரம் புதுவதாக எற்பட்டதெனவும் காட்டுகின்றமையாலும், இராமாநுஜராலே சக வருஷம் ௧000-க்கு மேலே ௧௨-சென்ற பகுதானிய ஸூ திருநாராயணபுரத்திலே திருமண் கண்டுபிடிக்கப்பட்டதாக அவரது வைபவத்தில் வெளியாகின்றமையாலும், நாலாயிரப் பிரபந்தத்துள் அந்நெடுக்குப் புண்டரம் யாண்டுஞ் சொல்லப்படாமையாலும், அப்படியே அது வேதத்திற் சொல்லப்படாமையாலும் வெள்ளை மண்ணும் மஞ்சட் பொடியுங் கொண்டிருக்கின்ற அந்நெடுக்கான ஊர்த்துவ புண்டரமானது நூதனமென்றே அசையா முளையடித்துவிடலாம். இப்புண்டரமும் இத் தென்னுடர்க்கன்றி வடநாடர்க்குப் போடப்படவில்லை யென்பதை அங்குளார் முகத்தினே யறியலாம். "மண் போட்டானு ?" "நாமம் போட்டானு ?" எனுஞ் சொற்கள் இங்குண்டாயிருத்தலையுஞ் சற்று யோசித்திடுக. இன்ன எதுக்களானே அந்தக் காப்பென்பது திருமண்காப் பென

லமையாது. வெண்மண்ணுக்குக் காப்பெனும் பெயரும் நூல்வழக்கிலில்லை. விபூதிக்கே அப்பெயருண் டென்பது "திருநீறே பற்பம் - பொடியொடு விபூதிகாப்பாம்" எனுஞ் சூடாமணி நிகண்டாலுமறியக் கிடக்கின்றது. காப்பென் பதே வடநூல்களில் "ரக்ஷா" என நிற்கின்றது. ஸ்ரீ பாலகிருஷ்ணனுக்குப் பூதப்பிரேதராக்ஷதாதிகளாற் பய முண்டாகாமற் காக்கும் பொருட்டு அசோதா தேவி திரு நீறணிபாக்கு அந்தி நேரத்தி லழைத்து அணிந்தாளென்பதே யப்பதிகத்தின் கருத்து. இக்கருத்து கொண்டே ஆழ்வார் கூறுவதற்கு :—

"உடனே நந்தகோபரும் வந்து அக்குழந்தையை யெடுத்துக்கொண்டு கோமய சூர்ணத்தை அதன் சிரசிற் காப்பாக வைத்து" என்று வைணவர்க்குச் சிறப்பு நூலா யுள்ள விஷ்ணுபுராணத்தின் ரு-வது அமிசம் ரு-வது அத்தி யாயத்தில் பூதனையெனும் இராக்ஷசியின் முலைப்பாலுண்ட ஸ்ரீகண்ணன் விஷயமாகச் சொல்லப்பட்ட செய்தியே ஏதுவாயிருந்ததென்க. "கோமயசூரணம் = விபூதி" என்று மேற்படி புராணம் ௬0௭-வது பக்கக் குறிப்பிலும் விளக் கப்பட்டுள்ளது. "பழைய வார்த்தைக் கட்டுகளுமிப் படியே" என்ற வைணவர் வாசகம் திருநீற்றுத் திரிபுண்ட ரத்தைக் கூறும் வேதத்தைக் குறித்ததாகும். அங்ஙனந் தமது புதுக்கட்டுகள் போல்வதாம் அவ் வேத விஷயமு மென்பது அவர் கருத்துப் போலும்.

"உணர்ந்தாய் மறைநான்கு மோதினாய் நீதி
மணந்தாய் மலர்மகடோண் மாலே" (2229)

எனும் பூதத்தாழ்வார் கூற்றுவழியே வேதங்க ளுணர்ந்து நீதிகளோதிய திருமால் கருத்துக்கும் அவர் கருத்து விரோத மாமே. அந்தோ எந்நூலுக்கும் முன்னூலா இறைவனூலா யுள்ள வேதத்தை இப்படிக் கட்டுப்பாடென இகழ்தலெவர் செய்கை யென்பேம். இது பாதகமாகு மென்று அவரறி யாத அறியாமை கணித்து வேதாபிமானிகள் பெரிதும் வியசனிப்பரன்றே. நிற்க. (தொடரும்)